

# திண்ணா

திண்ணா என்கிற திருநாராயணனை நான் முதலில் சந்தித்த போது அப்போதுதான் முலைப்பாலை மறந்திருப்பான் போலிருந்தது. ஏறக்குறைய குழந்தைதான். இளம் பாலகன். இவனுடைய அப்பாவும் அம்மாவும் தகரப் பெட்டியுமாகப் பாடசாலையில் சேருவதற்காகச் சேனங்குளத்திலிருந்து வந்திருந்தான். அப்பா ஒன்றும் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. "எட்டே முக்கா பஸ்ஸைப் புடிச்சாத்தான் சேனங்குளத்துக்குப் பும்மாலை போயிடலாம்; அவாள்ளாம் பாத்துப்பா வா" என்று மனைவியை அதட்டிக்கொண்டிருக்க, அந்தத் தாய்தான் விக்கி விக்கி அழுதுகொண்டிருந்தாள் பாட்டியிடம். "மாமி அடுத்த வேளைச் சோத்துக்கு வழியில்லாமத்தான் புள்ளையை விட்டுட்டுப் போறோம். பாத்துக்கங்கோ மாமி" என்று கெஞ்ச, பாட்டியும் அம்மாவும் "நீங்க போயிட்டு வாங்கோம்மா, பாடசாலைல எட்டுருக்குப்

பாத்துப்பா. அடிக்கடி ஆத்துக்கு வரச் சொல்லுங்கோ, நாங்களும் பாத்துக்கறோம்."

"திண்ணா, திண்ணா, நான் போயிட்டு வரேண்டா" என்று அவள் அவன் கன்னத்தை ரத்தம் தெரியப் பிடித்து அழுத்தி விடை பெற்றபோது இளம் பாலகன் அப்போதே ஒருவித முதிர்ச்சி யுடன்தான் இருந்தான். "அண்ணா போயிட்டு வாங்கோ. அம்மா போயிட்டு வாம்மா. நான் சமர்த்தா இருக்கேன். அழாதம்மா. எச்சுமி, அலமேலு, நப்பின்னை எல்லாரையும் விசாரிச்சதா சொல்லும்மா" என சினிமாப் பாலகன்போலப் பேசியது வியப்பாக இருந்தது.

ரொம்ப அழகான பையன், நல்ல சிவப்பு. அய்யங்கார் குடும்பங் களில் இப்படித் திடீர் என்று ஒருவிதமான இரானியச் சிவப்பைச் சந்திக்க முடியும். ரோஜா நிற உதடுகள். அந்தச் சின்ன வயசிலேயே தன்னுடைய பொறுப்பையும் ஏழ்மையையும் உணர்ந்து கொண்டது போல அந்தக் குழந்தைக்கு ஒருவிதமான தேஜஸ் இருந்தது. உடனே கட்டி முத்தமிடலாம்போல இருக்கும்.

ஒரு கன்னிப் பெண்ணின் பொறாமையாக அடர்ந்த கருங்கூந்தலைச் சேகரித்துப் பின்னால் கட்டுக்குடுமியாக வைத்து, முன் மண்டையில் அப்பளம் போலச் சவரம் செய்து, நெற்றிக்குக் கொஞ்சம் பெரிசாகவே தென்கலை நாமம். திருமண் ஸ்ரீசூரணம் இட்டிருந்தான். எங்கள் எல்லோருக்கும் அவனைப் பிடித்துப் போய்விட்டது. பாட்டி அவனை வாமன அவதாரம் என்றே நம்பினாள்.

அவன் பாடசாலையில், 'உயர்வற உயர்நலம் உடையவன் எவன் அவன்' சொல்லும்போதே, நம்மாழ்வாரே மறுபடி வந்துவிட்டார் என்று சொன்னாள்.

இந்தப் பாடசாலை என்பது சம்பிரதாயமான பள்ளி அல்ல. தாஸ் வீட்டையும் ராவிராவின் வீட்டையும் அடுத்து வடவண்டைப் பக்கத்தில் மூன்று நான்கு வீடுகள் தள்ளி இருந்தது. குவளகுடி சிங்கமய்யங்கார் (குசி) பாடசாலை. தென்னாச்சார் சம்பிரதாயத்தை நிலைநாட்டுவதற்காக ஏற்படுத்தியது. குவளகுடி சிங்கமய்யங்கார் என்பது என்னுடைய கொள்ளுத் தாத்தா. தாய் வழி மூதாதை.

அய்யங்கார்களில் இரண்டு பிரிவு உண்டு. வடகலை, தென்கலை (அடைய வளைஞ்சான் பெரியார் கட்சிக்காரர்கள் 'எச்சக்கலை' என்று மூன்றாவதையும் சேர்த்துக்கொள்வார்கள்.) அய்யங்கார் என்பதே ஒருவிதமான சிறுபான்மைதான். தமிழ்நாட்டில் எத்தனை அய்யங்கார் கள் இருக்கிறார்கள் என்பது பற்றி யாரும் கணக்கெடுத்ததாகத் தெரியவில்லை. டி.வி.எஸ்., இந்து குடும்பங்களின் அமைப்புகளான தனியார் துறைகளில் சில நாமங்களைப் பார்க்க முடியும். மற்றபடி அய்யங்கார்கள் எல்லாம் தமிழ்நாட்டுக்கு வெளியே சிதறியிருக்கிறார் கள். பரிட்சைகளில் தொண்ணூறு மார்க்கு வாங்கிச் சளைத்து, சமூக மாறுதல்களில் சந்தர்ப்பங்கள் கிடைக்காமல் வெளி மாநிலங்

களிலோ அல்லது வெளி தேசங்களிலோ இருக்கிறார்கள்.

இந்தச் சிதறிய சமூகத்திலும் இரண்டு வகை. வடகலை, தென்கலை. தீவிர தென்கலைக்காரர்கள் வடகலையில் பெண்ணெடுக்க மாட்டார்கள். வடகலை நாமம் போட்ட கோயிலில் வணங்கமாட்டார் கள். அதேபோலத் தீவிர வடகலைக்காரர்கள் 'தென்கலை யெல்லாமே கீழ்சாதி, ராமானுசர் போகிற போக்கில் இழுத்து விட்ட நாமங்கள்' என்று சொல்லிக்கொண்டு தென்கலையைச் சீண்ட மாட்டார்கள். இரண்டு பிரிவுகளுக்கும் நாமத்தைத் தவிர வித்தியாசம் என்னவென்று உன்னிப்பாகப் பார்த்தால் யாருக்கும் தெரியாது என்றே சொல்ல வேண்டும்.

எனக்குத் தெரியும். இதற்கு பகவானுடைய வாத்ஸல்ய நோக்கங்கள், ஸ்ரீவைஷ்ணவ மதம் பகவானைப் பரமகாருணிகனாக நம்புகிறதும், வேதாந்த தேசிகரின் தயாசதகத்திலிருந்து கொட்டேஷன் எல்லாம் கொடுத்து விவரிக்க வேண்டும். உழக்கில் கிழக்கு மேற்கு! இந்தக் காலத்தில் இந்தப் பிரிவுகளின் அபத்தம் புலப்பட்டு, சமூக மாறுதல்கள் என்னும் மாருதத்தின் திசையில் மறைந்து போய், தென்கலையோ வடகலையோ சோறு கிடைத்தால் போறும் என்று பெரும்பாலான அய்யங்கார்கள் சிதறியிருந்தாலும் உள்ளுக்குள் இந்தக் கலை வித்தியாசங்கள் இன்றும் உறங்கிக் கொண்டிருப்பது ஸோஷியால ஜிஸ்ட்டுகளுக்குப் பொருத்தமான விஷயம். என்னுடைய சொந்த ஆராய்ச்சியின்படி தென்கலைப் பையன்கள் ஒன்று அமெரிக்காவில் இருக்கிறார்கள்; இல்லை, சமையற்காரர்களாக இருக்கிறார்கள்.

குசி பாடசாலை தென்கலை சம்பிரதாயத்தை நிலைநாட்டுவதற்காக ஏற்படுத்தப்பட்டது. அதன் சரியான காரணம், சிங்கமய்யங்கார் தன் வாரிசுகள் சொத்தை ஒழித்துக் கட்டிவிடுவார்கள் என்கிற பயத்தால், போனஸாகப் புண்ணியமும் கிடைக்கிறது என்று ஒரு விநோதமான டிரஸ்ட் ஏற்படுத்தி, தேசாந்திரிக் கட்டளை, பாடசாலை, லைப்ரரி என்று குழப்பமாக ஒரு உயில் எழுதி வைத்து விட்டுச் சென்றார். எங்கள் குடும்பத்தில் முதல் எழுத்தாளர் இவர்தான் என்று சொல்லவேண்டும். பத்ரிகாசிரமம் யாத்திரை போயிருந்தபோது அந்த அனுபவங்களைப் பயணக்கட்டுரைபோல எழுதிச் சொந்த செலவில் விலாசம் பிரஸ்ஸில் அச்சடித்து, புத்தகத்தின் ஒரு காப்பியை நான் படித்திருக்கிறேன். அவர் எழுதிய வில்லிலும் கற்பனை வளம் அதிகமாக இருந்திருக்க வேண்டும். அந்த வில்லைப் பற்றி இன்றைக்கும் சுப்ரீம் கோர்ட்டில் கேஸ் நடக்கிறது.

குசி பாடசாலையின் முதல் நோக்கம் ஏழை அய்யங்கார் பிள்ளைக்கு (பிரிஃப்ரபப்ளி தென்கலை) வேதம், பிரபந்தம் சொல்லித் தருவது, சிறு வயதிலேயே இவர்களைத் தேர்ந்தெடுத்து ஆஸ்டலில் வளர்த்து நல்ல பழக்கங்கள் சொல்லித் தருவது, ஞானம் புகட்டி, அவர்களைச் சில வருஷங்களுக்குப் பின், வெளியுலகத்துக்கு விரட்டுவது.

விசிஷ்டாத்வைத சித்தாந்தமும் நாலாயிர திவ்யப் பிரபந்தமும் புருஷசூக்தம், வேத உபநிஷத்துக்கள் போன்ற ஞானங்களும் எந்த விதத்தில் அந்தப் பாலகனுக்கு உயிர் வாழ உபயோகம் என்று சிங்கமய்யங்கார் யோசிக்கவில்லை. முப்பதுகளிலேயே அந்தக் கல்வி அமைப்பில் முரண்பாடு இருந்திருக்கிறது. அதில் பாஸ் பண்ணிவிட்டு வெளியே வருபவர்கள் கெமிஸ்ட்ரி, ஃபிஸிக்ஸ், மேத்தமேட்டிக்ஸ் தெரியாமல் என்ன ஆனார்கள் என்று தகவல் இல்லை. இருப்பினும் அய்யங்கார் சாதியில் ஏழ்மை அதிகம் இருந்ததால் வருஷா வருஷம் பிள்ளைகள் சேருவதில் என்னவோ குறைவில்லாமல் இருந்தது.

உத்ரவாதமான சோறும் புதன்கிழமை எண்ணெய் சீயக்காயும் ஆறு மாதத்துக்கொருமுறை பத்தாறு வேஷ்டியும் தீபாவளிக்குப் பட்டாசும் கொடுத்தால் பிரபந்தம் என்ன, அரிஸ்டாட்டில்கூட கற்றுக்கொள்ளத் தயாராக நிறையவே குழந்தைகள் இருந்தார்கள். அப்படிச் சேர்ந்த பிள்ளைகளில் ஒருவன்தான் திருநாராயணன்.

குறுகிய காலத்தில் திண்ணா எல்லாரையும் கவர்ந்துவிட்டான். அதிகாலை குளித்துவிட்டுப் பளிச்சென்று நாமம் இட்டுக்கொண்டு வீட்டுக்கு வருவான். “மாமி, சக்கரத்தாழ்வார் கோவிலுக்குப் போறேன். எண்ணெய் கொடுத்தா விளக்கேத்திட்டு வரேன்.”

“வாடா திண்ணா! இந்தா. நேத்திக்கு அதிரசம் பண்ணிருந்தது. திண்ணாக்குன்னு ஒண்ணு எடுத்து வெச்சிருந்தேன்.” பாட்டி கொடுக்கும் தின்பண்டங்களை ஒருவிதமான நாசூக்குடன், ஏழ்மை தெரியாமல், போனாற் போகிறது என்றுதான் வாங்கிக்கொள்வான். அதை எப்போது தின்கிறான் என்பதும் தெரியாது. அவ்வப்போது என் அல்ஜீப்ரா புத்தகத்தையெல்லாம் ரொம்பத் தெரிந்தவன் போல் பிரித்துப் பார்ப்பான். “என்ன போடறே?” என்று வத்ஸூவை விசாரிப்பான். கூடத்திலிருக்கும் பெரிய கண்ணாடியில் தன்னைப் பார்த்துக்கொள்ளவே மாட்டான்.

“திண்ணா, கொஞ்சம் பிரபந்தம் சொல்லிட்டுப் போயேன்!”

அழகாகச் சப்பணமிட்டு உட்கார்ந்துகொண்டு கணீர் என்ற குரலில் – திராவிட வேதம் என்று சொல்லப்படும், அந்தத் தமிழ் வார்த்தைகளின் தெளிவும் அழகும் யாரையும் மயிர் சிலிர்க்க வைக்கிற சங்கீதக் குரல் – ‘கிளர் ஒளி இளமை கெடுவதன் முன்னம்’ என்று திருவாய்மொழியும்போது நம்மாழ்வாரே பெருமைப்பட்டிருப்பார். பின்னர் அரையர் கடைக்குப் போய் சாமான்கள் வாங்கித் தருவான். பூத்தொடுத்துக் கொடுப்பான். திருவாராதனம் செய்வான். சில்லறையாகக் காசு வாங்க மாட்டான். “எல்லாத்தையும் சேர்த்து வெச்சுருங்கோ மாமி! எங்கம்மா வந்ததும் கொடுத்துருங்கோ.” அவனை நேராகப் பார்க்கும்போது முகத்தில் ஒளிர்ந்த அழகையும் கலக்கும் புன்னகையையும் பார்க்கையில் “இது ஒரு அவதாரம்தான்” என்று பாட்டி சொல்வதில் விஷயம் இருக்கிறது என்று பலமுறை எனக்குத் தோன்றியது.

நான் காலேஜ் முடித்துவிட்டு சென்னையில் ஆஸ்டலில் சேர்ந்து சில வருஷ இடைவெளிகளில் திண்ணாவை அதிகம் பார்க்கவில்லை. ஏறக்குறைய அஞ்சு வருஷம் கழித்து ஒருமுறை ஸ்ரீரங்கம் சென்றபோது திண்ணாவைப் பற்றிப் பாட்டியிடம் கேட்டபோது, "அதையேன் கேக்கறே, அந்தப் பிள்ளையைப் பத்தி நான் சொன்னது பலிச்சுடுத்து! அது மானிடப் பிள்ளையில்லைடா, அவதாரம்" என்றாள்.

"என்ன பண்றான் பாட்டி?"

"வாயேன், இன்னிக்கு மத்யானம் தொண்டரடிப் பொடியாழ்வார் சன்னதிக்கு!"

மத்தியானம் தொண்டரடிப் பொடியாழ்வார் சன்னிதியில் உபன்யாசம். வாரம் நான்கு தினம் நடக்கும். மொத்தம் மூன்று பேர் கேட்டுக்கொண்டிருப்பார்கள். என் பாட்டி, சன்னிதிக் காப்பாளர், அப்புறம் வரதாச்சாரியார் சுவாமியின் மனைவி. இப்போது போய்ப் பார்த்தால் சன்னிதி நிரம்பி வெளியேயெல்லாம் ஜனங்கள் உட்கார்ந்திருக்க, நடுநாயகமாக வரதாச்சாரியார் கொடுத்த பச்சைப் பட்டுச் சால்வையைப் போட்டுக்கொண்டு காதில் சிவப்புக்கல் கடுக்கனும் கையில் மோதிரமுமாக,

'குலந்தாங்கு சாதிகள் நாலும் கீழி ழிந்து எத்தனை
நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணன் தாளென்றுள்
கலந்தாள் அடியார்தம் அடியார் எம் அடிகளே.'

கணீர்க்குரலில் பாடிய திண்ணா வளர்ந்திருந்தான். நெற்றிப் புருவங்கள் வில்லாய் வளைந்திருக்க, கன்றுக்குட்டிக் கண்களும் இயற்கையாகவே மையிட்டாற்போல் இருக்க, ஒளிரும் பற்கள் ரோஜா ஈறுகள், குரலில் பேஸ் கலந்த வசீகரம். உபன்யாசத்தில் ஏகப்பட்ட பெண்கள் கூட்டம் இருப்பதைக் கவனித்தேன். அவன் வயசுக்கு மீறியதாகத்தான் இருந்தது. 'ஜீவாத்மாவாக அல்லாது ஆத்மா என்று சொல்லப்படற 'சித்; ஞானஸ்வரூபமாய் ஜடமாய், தனக்குத்தானே தோணக்கூடியதாய் இருக்கும் அறிவா மட்டும் இல்லாம அறிவாளியாகவும் இருக்கிறதால ஞானத்தைக் குணமா உள்ளவன்தான் ஆத்மா ...'

அவன் சொல்வது பெரும்பாலும் பெண்கள் கொண்ட அந்தக் கூட்டத்தினருக்குப் புரியாவிட்டாலும் பரவாயில்லையென்று தோன்றியது. அவன் சொல்லும் விதம் ... குரல், அதன் ஆழம். எப்படி இந்தச் சிறுவனால் இவ்வளவு சிக்கலான சித்தாந்தங்களைப் பேச முடிகிறது? எப்படி இதில் பதவிசு குன்றாமல் மிகத் தீவிரமாகப் பேச முடிகிறது? இவன் வயசுப் பிள்ளைகள் கிரிக்கெட் ஆடிக் கொண்டு, சினிமா பார்த்துக்கொண்டு, சைட் அடித்துக்கொண்டிருக்கும்போது இவனால் எப்படி 'சுத்த ஸத்வம், மிச்ர ஸத்வம், ஸத்வ சூன்யம்' என்றெல்லாம் சொல்ல முடிகிறது? இந்த யுகத்துக்கு எல்லாம் மதிப்பு இருக்கிறதா? இவன் அவதார புருஷன் இல்லாவிட்டால், என்னவாம்? இவ்வாறு யோசிக்க வைத்தான் திண்ணா.

அவன் உபன்யாசத்தை வியப்புடன் கேட்டுக்கொண்டிருந்த அந்தப் பெண்மணிகளைப் பார்த்தேன். இளம் பெண்கள், திருமணமானவர்கள், விதவைகள், பாட்டிகள்! ஏதோ ஒரு விதத்தில் அவர்களுக்கு மனசுக்குள் குழப்பமாக இருந்த மஹாவிஷ்ணு உருவம் தீட்டப்பட்டு திண்ணா வாகத் தோற்றமளித்ததோ என வியந்தேன்.

அடுத்த முறை இன்னும் சில வருஷங்கள் கழித்து, எனக்குப் புதுசாக வேலை டில்லியில் ஆன கையுடன் லீவில் வந்திருந்தபோது போயிருந்தேன். அங்கே ராமகிருஷ்ணா மடத்தில் திண்ணாவின் உபன்யாசம் நடந்துகொண்டிருக்க, அவன் இன்னும் கொஞ்சம் சிவப்பாக, இன்னும் கொஞ்சம் பளபளப்பாக, குரலில் இன்னும் கொஞ்சம் கம்பீரம் சேர்ந்துகொண்டு, திண்ணா ஒரு எதிர்கால சின்மயானந்தாவாக ஆவதற்கு உரிய அறிகுறிகள் எல்லாம் கண்டேன்.

இத்துடன் திண்ணாவின் கதை முடிந்திருந்தால் எனக்கு சந்தோஷ மாகவே இருக்கும். இல்லை. போன வாரம் சென்னைக்கு ஒரு கல்யாணத்துக்கு வந்திருந்தபோது அந்தக் கல்யாணத்தில் ஒரு பெண் கமலைப் பார்க்க வேண்டும் என்று துடித்தாள். அவள் வாழ்வு கமலஹாசனைப் பார்த்துவிட்டுத்தான் சாபல்யம் அடையும் போல இருந்தது.

மேலும், 'உங்களுக்கு கமலைத் தெரியும் என்று பேப்பரில் எல்லாம் வருகிறதே' என்று ஆரம்பித்து ஏறக்குறைய அந்த நட்பை நிரூபிக்க வேண்டியதாகிவிட்டது. இல்லையெனில் புகுந்த வீட்டில் என் மானம் போய்விடும்போல இருந்தது. டெலிபோன் பண்ணியதில் ஒரு இந்திப் படப்பிடிப்பில் கமல் வாஹினியில் இருப்பதாகத் தெரிந்தது.

இந்தப் பெண்ணை அழைத்துச் சென்று கமலை அவர்கள் முழுசாகப் பார்த்ததில் அப்படியே பிரமித்துப் போய் ஆட்டோ கிராஃப் வாங்கவோ, பேசவோ அவர்களால் இயலாமல் சிலைபோல் நிற்க, சற்று நேரம் கமலுடன் சினிமாவின் அபத்தத்தின் இடையில் World According to Garp பற்றியெல்லாம் பேசிவிட்டுத் திரும்புகையில் ப்ரொடக்ஷன் பார்த்துக்கொண்டிருந்த ஓர் இளைஞனைப் பார்த்த ஞாபகமாக இருந்தது. அவனும் என்னையே வெறித்துப் பார்த்துக் கொண்டு சற்று தயங்கிவிட்டு என்னருகில் வந்து 'என்ன அண்ணா எங்க வந்தேள்?'

"நீ . . . நீங்க . . . நீ?"

"திண்ணா! தெரியலை?"

"தி . . . திண்ணாவா?"

தெரியவில்லைதான். கடைசியில் பார்த்தது சேலத்தில் சால்வையும் வைரக் கடுக்கனும் சமகால ராமானுஜர் போல்! இப்போது கருகரு வென்று மீசை, அடர்த்தியான பாணலி கிராப். அனாவசியமாகக் கழுத்துப் பகுதியில் எல்லாம் பூ வேலை செய்த லக்னோ ஜிப்பா.

கழுத்தில் கைக்குட்டை, மைனர் செயின். இரு கன்னங்களிலும் பரு கொப்பளித்து ஒரு கன்னம் மட்டும் புகையிலையால் உப்பியிருக்க, உதடுகளில் கருநீலக்கறை படிந்திருக்க, இடது கையில் பான்பராக், ஜாப்ராணி தேஜபத்தி, இந்தியா கிங்ஸ் டப்பி ...!

"திண்ணா, நீ உபன்யாசம் பண்ணிண்டிருந்தியே பிரபந்தம் சொல்லிண்டு இருந்தியே. அதெல்லாம் ..."

"அதெல்லாம் ஒரு காலம் அண்ணா. இப்ப ராவ்காரு படத்துக்குப் புரொடக்ஷன் பாத்துண்டிருக்கேன். கமல், பூனம் தில்லன். கதை நம்ம கதைதான். கேஜிஸார் கிட்ட 'நமக்கேன் வம்பு'ன்னு ஒரு காமெடி போன வருஷம் ஜுபிலி பண்ணித்துப் பாருங்க! நான்தான் ஒரு பெஸ்டிவல் படத்தை 'உல்ட்டா' பண்ணி எழுதிக் கொடுத்தேன். இந்தியில ரெண்டரைக்கு ரைட்ஸ் வாங்கியிருக்கா. அப்புறம் விஜிஆர் யூனிட்ல ..." அவன் தமிழே வேறுவிதமாக மாறியிருந்தது. "காப்பி சாப்பிடறேளா?"

"இல்லைப்பா."

"சிகரெட்?"

"இல்லைப்பா."

"அண்ணா எழுதிய கதையெல்லாம் டயம் கிடைச்சா படிக்கறது உண்டு. ஏதோ ஸ்ரீரங்கத்துக்காராள்ளாம் நல்ல நிலைமைக்கு வந்தா சந்தோஷம். நானும் நல்ல நிலைமையிலதான் இருக்கேன். உங்க சப்ஜெக்ட்கூட ஒண்ணு பண்ணணும். பங்களூர் வந்து டிஸ்கஸ் பண்ணணும்னு டைரக்டர் சொன்னார் ... நம்ம சொந்த புரொடக்ஷனே!"

"திண்ணா, உனக்கு பிரபந்தம் எல்லாம் ஞாபகம் இருக்கா?"

திண்ணா எதிர்ப்பக்கம் போய்க் கொப்பளித்து செத்த புகையிலையைத் துப்பிவிட்டுத் திரும்பி வந்து "எல்லாம் மறந்து போச்சு!" என்றான்.

"ஆத்துக்குப் போறதுக்கு வண்டியிருக்கா? வண்டி அனுப்பச் சொல்லட்டுமா?"

திரும்பச் செல்லும்போது ஜீன்ஸ் அணிந்த பெண்ணுடன் அன்யோன்யமாக ஜோக் அடித்துக்கொண்டிருந்த திண்ணாவின் சாதனையை 'வீழ்ச்சி' என்று என்னால் சொல்ல முடியவில்லை.

1983